# قصة آدم عليه السلام للأطفال

الاعداد : علي ابو خالد العمري

சிறுவர் சிறுமியர்க்கு

# ஆதம் நபி கதை

K. J. **மஸ்தான் அலீ பாகவி, உமரி**
(அபூ காலித்)

## இணைதுணை இல்லாத ஏக இறைவன்

ஞாயிற்றுக் கிழமை விடுமுறை என்பதால், பிள்ளைகள் எல்லாரும் முன்னரே ஹாலுக்கு வந்து கதை கேட்பதற்காகக் காத்திருந்தனர்.

ஆமினாவும் ஃபாத்திமாவும் தத்தமது தோழிகளையும் அழைத்து வந்திருந்தனர். கமாலுடன் கிரிகெட் மட்டை சகிதமாக அவனுடைய நண்பர்களும் அமர்ந்திருந்தனர்.

சலீம் சற்றுத் தாமதமாகவே வந்தார். சாய்வு நாற்காலியில் அமரும் முன் பிள்ளைகளை நோக்கி ஒரு பார்வை செலுத்தினார்.

விடுமுறை நாட்களில் கதை சொல்வதற்காகத் தாம் மேற்கொள்ளும் உழைப்பும் முயற்சியும் வீண் போகவில்லை. பிள்ளைகள் உற்சாகமாகக் கதை கேட்க வருகின்றனர் என்று பெருமிதம் கொண்டார். அதிலும் இன்று அதிக எண்ணிக்கை யில் பிள்ளைகள் வந்திருப்பதைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தார்.

சலீம்: என்ன, எல்லோரும் வந்து விட்டீர்களா? கதை சொல்லலாமா?

ஆமினாவும் ஃபாத்திமாவும்: அப்பா, சற்றுப் பொறுங்கள், அம்மா இன்னும் வரவில்லை ....

- சமையல் அறையிலிருந்து, இதோ! வேலைகள் முடிந்து விட்டன., நான் கதை கேட்க வேண்டாமா என்று சொல்லிக் கொண்டு ஜைனப் வந்தாள். பிள்ளைகளுக்குப் பின்னால் அமர்ந்தாள்.

கமால் அவசர கோலத்தில் ஒன்றைச் சொன்னான்: அப்பா, இன்று கதையைச் சுருக்கமாக முடித்துக் கொள்ளுங்கள். இன்று பள்ளியில் எங்களுக்கு கிரிகெட் மேட்ச்! நாங்கள் சீக்கிரம் செல்ல வேண்டும்.

சலீம்: சரி இன்றைக்கு நீ விளையாடச்செல். கதையை இன்னொரு நாளைக்கு வைத்துக் கொள்ளலாம்.

மற்ற பிள்ளைகள்: இல்லை, அப்பா! கமால் வேண்டுமானால் போகட்டும். எங்களுக்குக் கதை சொல்லுங்கள்.

சலீம் லேசாகக் கனைத்துக் கொண்டு, கதை சொல்லத் தொடங்கும் வேளையில் ....

ஜைனப்: சரி, இன்றைக்கு என்ன கதை? எதையாவது சொல்லி போரடிக்காதீர்கள். பிள்ளைகள் மனத் தில் பதியும் வண்ணம் நல்ல அறிவுரைகளைக் கொண்ட கதையாக இருக்கட்டும். வாழ்க்கையின் எல்லாத் திருப்பங்களிலும் வழிகாட்டும் வகையில் வித்தியாசமான கதையாகச் சொல்லுங்கள்!

சலீம்: நான் இன்று சொல்ல வந்திருக்கும் கதை நல்ல பயன்மிக்க கதைதான். ஆனால் நீங்கள் கவனத் தோடு கேட்டால்தானே. சிந்தனையை வேறு எங்காவது வைத்துக்கொண்டும் விளையாட்டு மூடுஉடனும் உட்கார்ந்திருந்தால் எப்படி? என்ன கமால் அப்படித்தானே!

கமால்: சரி, அப்பா! நாங்கள் விளையாடப் போகவில்லை. அஸர் தொழுகைக்குப் பிறகு விளையாடலாம் என்று முடிவு செய்து விட்டோம்.

சலீம்: சரி, பாருங்கள்! இன்று நான் சொல்லப்போவது மிகவும் வித்தியாசமான கதை! எப்படி என்றால்? சாதாரணமாக எல்லாக் கதைகளும் ஓர் ஊரில் ஒரு மன்னர் இருந்தார் ..... முன்னொரு காலத்தில் ஒரு மனிதன் இருந்தான் என்றுதானே ஆரம்பம் ஆகும்.

பெரும்பாலான கதைகள் - காலம், இடம், ஊர், உலகம் என்று தானே தொடங்கும். ஆனால் இன்று நான் சொல்லப் போகிற கதை அப்படிப்பட்டதல்ல. இது மிகவும் வித்தியாசமானது. மனிதன் படைக்கப் படுவதற்கு முன்பிருந்தே இந்தக் கதை தொடங்குகிறது.

(சலீம் கதையைத் தொடங்கினார்)

ரொம்ப காலத்திற்கு முன்னால் - ஆதிகாலத்திற்கும் அப்பால் இறைவன் மட்டும்தான் இருந்தான். அப்பொழுது எதுவும் இல்லை!

சலக அலங்காரத்துடனும் புகழுடனும் இறைவன் மட்டும்தான் இருந்தான்! இறைவனுடன் எந்தப் பொருளும் இல்லை!

ஆம்! நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் இந்த உலகம் அப்பொழுது இல்லை. இந்தப் பூமியோ வானமோ சந்திரனோ சூரியனோ நட்சத்திரங்களோ மரங்களோ செடிகளோ மலைகளோ கடல்களோ ... எதுவும் இல்லை! எல்லாம் வல்ல இறைவனாகிய அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறெதுவும் இல்லை.

அந்த நிலையை மனித அறிவால் அறிந்திட இயலாது! அது, கற்பனை செய்யவும் முடியாதது!

விளையாட்டுப் பிள்ளைகள் கடற்கரையில் தோண்டும் சின்னச் சின்னக் கிணறுகளில் கடல் நீர் முழுவதை யும் கொண்டு வருவது எப்படி முடியாதோ அதுபோலதான் அந்த ஆதி நிலையை மனித னின் சிற்றறிவுக்குள் கொண்டு வர முடியாது!

## 2 - மலக்குளும் ஜின்னுகளும்

ரொம்ப... ரொம்ப காலத்திற்கு முன்னால் இந்தப் பேரண்டத்தைப் படைப்பதற்கு அல்லாஹ் நாடி னான். இந்தப் பூமியைப் படைக்க நாடினான். சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள் என ஒவ் வொன்றையும் படைக்க நாடினான்.

கடல்கள், நதிகள், மரங்கள், செடிகள், மலர்கள், காடுகள், விலங்குகள், பறவைகள் என ... எல்லாப் படைப்புகளையும் படைக்க நாடினான்.

அல்லாஹ்வின் ஆற்றல் எப்படிப்பட்டதெனில், அவன் ஒரு பொருளைப் படைக்க நாடிவிட்டால் ஆகுக என்று தான் அதற்கு ஆணையிடுவான்., அது ஆகிவிடும்!

இவ்வாறே... வானங்கள் பூமியையும், அவற்றிலுள்ள எல்லாப் பொருள்களையும் கருத்தில் கொண்டு - ஆகுக என்று ஆணையிட்டான்., அனைத்தும் ஆறு நாட்களில் உண்டாகி விட்டன!

கமால்: என்ன, ஆறு நாட்களிலா? ஆறு நாட்கள் என்று எப்படிக் கூற முடியும்? பூமியையும் சூரியனையும் .... அல்லாஹ் இப்பொழுதுதான் படைக்கிறான் என்கிறீர்கள்., அதற்குள் நாட்களின் எண்ணிக்கையும் கணக்கும் எங்கிருந்து வந்துவிட்டன? ஆறுநாட்கள் என்று எப்படிச் சொல்கிறீர்கள்?

சலீம்: கமால், நீ கேட்பது நல்ல கேள்விதான்! கதையைக் கவனமாகக் கேட்டால்தான் இப்படிப்பட்ட அறிவார்ந்த கேள்விகள் மனத்தில் உதிக்கும். நானும் இது பற்றி விளக்கத்தான் இருக்கிறேன். கவனமாகக் கேள்!

- அதாவது, ஆறு நாட்கள் என்றால் ஆறு யுகங்கள் என்று அர்த்தம். அவற்றின் சரியான கால அளவு என்ன என்பதை அல்லாஹ் தான் அறிவான். எனவே ஆறு நாட்கள் என்பது இப்பொழுது நாம் கணக்கிடுகிற ஆறு நாட்கள் அல்ல.

ஒரு நாளை நாம் எப்படிக் கணக்கிடுகிறோம்? 24 மணி நேரம் கொண்டது ஒரு நாள். - வேறு வார்த்தையில் சொல்வதானால் பூமி தன்னைத் தானே ஒருமுறை சுற்றுவதை ஒரு நாள் என்கிறோம், இல்லையா? பூமியில் சூரியனின் ஒளி விழுகிற காலத்தை பகல் என்கிறோம். இருள் படர்ந்து நிற்கும் நேரத்தை இரவு என்கிறோம். இரண்டும் சேர்ந்தது ஒரு நாள் என்கிறோம்!

ஆனால் அல்லாஹ்விடத்தில் ஒருநாள் என்பது ஆயிரம் ஆண்டுகள், அல்லது ஐம்பதாயிரம் ஆண்டுகள் என்று திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. எனவேதான் ஆறு நாட்கள் என்பது ஆறு யுகங்கள் என்கிறேன். அவற்றைச் சரியாகக் கணக்கிட்டு அறிபவன் அல்லாஹ் ஒருவன்தான்!

ஆறுநாட்கள் - யுகங்கள் பற்றி சிறியதொரு விளக்கம் அளித்த பிறகு சலீம் கதைக்கு வருகிறார் -

...இந்த வானமும் பூமியும் அல்லாஹ்வின் முன்னிலையில் பணிந்தன. ஒவ்வொரு பொருளும் அவனது வல்லமையைப் புகழ்ந்தன. அவனைத் துதித்தன!

❁ ஒவ்வொன்றும் அவன் பக்கம் தேவையானது. அவன் மட்டுமே எவரிடத்தும்-எப்பொருளிடத்தும் தேவை யாகாதவனாகத் திகழ்ந்தான்.

❁ படைத்த இறைவன் அவன்., அவனல்லாத ஒவ்வொன்றும் அவனால் படைக்கப்பட்டவை. அவனது தயவை எதிர்பார்த்து நிற்பவை!

அதன் பிறகு ஒளியிலிருந்து ஒருபடைப்பினத்தை அல்லாஹ் படைத்தான். அவர்களுக்கு மலக்குகள் என்று பெயர்.

மலக்குகள் நம் கண்ணுக்குப் புலப்படாத ஒரு படைப்பினம். அல்லாஹ்வின் ஆணைகளுக்கு முழுமையாகக் கீழ்ப்படியும் தன்மையைப் பெற்றவர்கள். அந்த ஆணைகளை அமல்படுத்தும் ஆற்றலையும் அல்லாஹ் அவர் களுக்கு வழங்கியிருந்தான்.

இன்னொரு படைப்பையும் அல்லாஹ் படைத்தான்., நெருப்பில் இருந்து! அவர்களுக்கு ஜின்னுகள் என்று பெயர். இவர்களும் நம் கண்களுக்குத் தென்படாத மறைவான ஒரு படைப்பினமே. இவர்களில் நல்லவர்களும் உண்டு. தீயவர்களும் உண்டு. அதாவது, இறைக்கட்டளைகளுக்குக் கீழ்ப்படிபவர் களும் உண்டு. அவற்றை மீறுபவர்களும் உண்டு!

பாக்ஷா: அப்பா, நீங்கள் சொல்லப்போகிற கதை என்ன என்பதை முதலில் சொல்லி விட்டால் நல்லது. நீங்கள் ஏதேதோ புதிர்கள் போட்டுக்கொண்டே செல்கிறீர்களே!

சலீம்: நான் ஆதம் நபி கதை சொல்லப்போகிறேன். ஆதம் நபிதான் உலகில் தோன்றிய முதல் மனிதர். இவரில் இருந்துதான் மனித இனம் பல்கிப் பெருகியது. உலகில் வாழ்ந்து மறைந்துவிட்ட-வாழ்ந்து கொண்டிருக்கிற எல்லா மனிதர்களுக் கும் ஆதம்தான் தந்தை.

இந்த உலகில் ஆதத்தைப் படைப்பதற்காகவே வானம் -பூமி எல்லாவற்றையும் அல்லாஹ் படைத் தான்.

## 3 - மலக்குகள் கேட்ட கேள்வி!

சலீம் கதையைத் தொடர்ந்தார்:

இந்த வானத்தையும் பூமியையும் இன்ன பிற பொருட்களையும் மலக்குகளையும் ஜின்னுகளையும் படைத்த பிறகு ஆதத் தைப் படைக்க நாடினான், அல்லாஹ்! குர்ஆன் கூறுகிறது:

اِذْ قَالَ رَبُّكَ لِلْمَلَائِكَةِ اِنِّى جَاعِلٌ فِى الاَرْضِ خَلِيْفَةً

இறைவன் மலக்குகளிடம் கூறினான்: நான் பூமியில் ஒரு பிரதிநிதியைப் படைக்கப் போகிறேன் " (2 : 30)

- இறைவன் கூறியது இதுதான்: மனிதன் என்றொரு படைப்பைப் படைக்கப் போகிறேன். இவ்வுலகில் மனித னுக்கு எல்லா அதிகாரங்களையும் கொடுத்து வாழச் செய்வேன். அந்த அதிகாரங்களையும் எனது பிரதிநிதி எனும் முறையில் பூமியில் அவன் பயன்படுத்த வேண்டும். எனது விருப்பப்படி பூமியின் ஒழுங்கமைப்பைச் சீராகப் பராமக்க வேண்டும்.

ஏதேனும் ஓரளவுக்குச் சுயமாகச் செயல்படும் - சுய விருப்பப்படி வாழும் சுதந்திரமும் மனிதனுக்குக் கொடுக்கப்படும். அப்பொழுது மலக்குகள் அல்லாஹ்விடம் கேட்டார்கள்:

قَالُوْا أ تَجْعَلُ فِيْهَا مَنْ يُفْسِدُ فِيْهَا وَيُسْفِكُ الدِّمَاءَ وَنَحْنُ نُسَبِّحُ بِحَمْدِكَ وَ نُقَدِّسُ لَكَ

பூமியில் ஒழுங்கீனத்தை ஏற்படுத்தி இரத்தம் சிந்தக்கூடிய மனிதனையா பிரதிநிதியாக ஏற்படுத்தப் போகிறய்? நாங்கள் தாம் உன்னைப் புகழ்ந்து துதித்து உனது தூய்மையைப் போற்றிக் கொண்டி ருக்கி றோமே! "

பாக்ஷா: அப்பா, மலக்குகள் ஏன் அப்படிக் கேட்டார்கள்?

சலீம்: இதென்ன ஏட்டிக்குப்போட்டி? அல்லாஹ், ஆதத்தை படைக்க நாடியபோது - நீ ஏன் ஆதத்தை படைக்கப் போகிறாய் என்று மலக்குமார்கள் கேட்டார்களே அதற்குப் போட்டியாக நீ இப்படிக் கேட்கிறாய், அப்படித்தானே! மகன் தந்தைக்கு ஆதரவாகத்தானே பேசுவான்! (எல்லாப் பிள்ளைகளும் சிரிக்கிறார்கள்)

- பிள்ளைகளே! மலக்குகள் அவ்வாறு கேட்டது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதா? மலக்குகள் தூய்மையானதொரு படைப்பு. நன்மையைத் தவிர வேறெதையும் நாடாதவர்கள். எந்நேரமும் அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனது பேராற்றலைப் போற்றிக்கொண்டிருப்பவர்கள். அவர்களது வாழ்க்கையின் ஒரே இலட்சியம் அது ஒன்றே! எனவேதான் நாங்கள் இருக்க மனிதனைப் படைக்க வேண்டிய அவசியம் என்ன என்று கேட் டார்கள்.

அது மட்டுமல்ல ஏதேனும் ஒருவகையில் சுதந்திரமாக வாழும் - சுயவிருப்பப்படி செயல்படும் நிலையும் மனித னுக்குக் கொடுக்கப்படும். அதன் அடிப்படையில் - அவன் நன்மை செய்கிறானா? தீமை செய்கிறானா என்று சோதிக்கப்படுவான் என்கிற விக்ஷயத்தையும் அல்லாஹ் மலக்குகளுக்கு அறிவித்திருப்பான். அதனால் அப்படி யொரு கேள்வியை அவர்கள் கேட்டிருப்பார்கள்!

ஜைனப்: மலக்குகள் அன்றைக்கு அப்படிக் கேட்டதால்தான் இன்றைக்கும்கூட மனிதர்கள் எப்பொழுதும் சண்டைபோட்டுக் கொண்டிருக்கிறார்களோ?வெட்டி வீழ்த்திக்கொண்டும் சுட்டுத் தள்ளிக் கொண்டும் இரத்தம் சிந்திக்கொண்டும் இருக்கிறார்களோ! (பிள்ளைகள் ஒருவரை ஒருவர் பரிதாபமாகப் பார்த்துக் கொள்கிறார்கள்)

சலீம்: ஆனால் அதற்கு அல்லாஹ் என்ன பதில் அளித்தான் தெரியுமா?

اِنِّى اَعْلَمُ مَا لاَ تَعْلَمُوْنَ

நீங்கள் அறியாத விஷயங்களை நான் அறிகிறேன்"

கமால்: ஆதத்தைப் படைப்பதன் நோக்கத்தை நான் அறிவேன் என்று அல்லாஹ் சொல்கிறானோ!

சலீம்: ஆம்! மலக்குகள் நினைப்பதுபோல் அல்ல. அல்லாஹ்வை வணங்கி வழிப்படுவதற்கும் அதற்கு மாற்ற மான நிலையை அதாவது தீயவழியை மேற்கொள்வதற்கும் சுதந்திரம் ஆதத்திற்குக் கொடுக்கப்பட்டது என்னவோ உண்மைதான். ஆனால் அவர் நல்வழியை மேற்கொண்டு அல்லாஹ்வை வணங்கி வழிபட்டு வாழ் வார். ஆதம் நபியின் இந்த வித்தியாசமான நிலை மலக்குகள் அறியாததாகும்.

பிறகு மலக்குகளை நோக்கி அல்லாஹ் கட்டளை பிறப்பித்தான். அதாவது. நான்ஆதம் எனும் முதல் மனி தரை உருவாக்கப் போகிறேன். அவரை முழுமையாகப் படைத்து அவரினுள் உயிரை ஊதினேன் என்றால் நீங்கள் எல்லோரும் அவருக்கு ஸு ஜூ து செய்ய வேண்டும்.

## 4 - ஆதம் தோன்றினார்

பாஷா ஆச்சரியத்துடன் கேட்டான்: என்ன? ஸு ஜூ து செய்யுமாறு கட்டளையிட்டானா? ஸு ஜூ து என்பது வணக்கவழிபாடு ஆயிற்றே! அதனை இறைவனுக்கு மட்டும்தானே செஷிய்ய வேண்டும். மனிதர்களுக்கும் ஸு ஜூ து செய்யலாமா? அது கூடாதே?

சலீம்: பாக்ஷா! அவசரப்படாதே! நானே விவரமாகச் சொல்லத்தானே செய்வேன். அது மிகவும் முக்கிய மான விக்ஷயம்! கவனமாகக்கேள். ஆதத்துத்துக்கு ஸு ஜூ து செய்யுமாறு மலக்குகளை நோக்கி அல்லாஹ் கட்டளையிட்டது கண்ணியத்தின் அடிப்படையில்தான்.,வழிபாட்டின் அடிப்படையில் அல்ல!

அது மட்டுமல்ல, அது அல்லாஹ்வின் கட்டளை என்பதால் - அது அல்லாஹ் அல்லாத ஒருவரை வழிபடு வதாகும் என்கிற பேச்சுக்கே இடமில்லை. அல்லாஹ்வின் கட்டளைப்படி ஆதத்துக்கு ஸு ஜூ து செய்வ தென்பது அல்லாஹ்வை வழிபடுவதாகவே ஆகும். ஏனெனில் அல்லாஹ்வை வணங்கி வழிபடுவதும் அவனது கட்டளையைச் செயல்படுத்துவதும் ஒரே அந்தஸ்தில் உள்ளவைதான்.

என்ன பாக்ஷா! புரிகிறதா? இன்னொரு விக்ஷயத்தையும் கவனி. இஸ்லாத்தின் அடிப்படையைச் சரியாகப் புரியாத சிலர், ஆதத்துக்கு மலக்குகள் ஸு ஜூ து செய்ததுபோல கைஷிகுமார் களுக்கும் குருமார்களுக்கும் நாம் ஸு ஜூ து செய்யலாம்., அது கூடும் என்று சொல்லி மக்களைத் தவறான வழிக்கு அழைக்கிறார்கள்!

இன்னும் சில மூடர்கள் உள்ளனர். நல்லவர்கள் அடக்கம் செய்யப்பட்டுள்ள மண்ணறைகளுக்குச் சென்று அந்த மண்ணறைகளை நோக்கி -அதாவது அங்கு அடக்கம் செய்யப்பட்டவர்களுக்கு ஸு ஜூ து எனும் சிரவணக்கம் செய்யலாம்., அதில் தவறில்லை என்று பேசுகிறார்கள். வாதாடுகிறார்கள். இது எவ்வளவு பெரிய அறியாமை!

ஸு ஜூ து என்பது ஓர் இறைவழிபாடு. அதனை அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே நிறைவேற்ற வேண்டும்., வேறு எவருக்கும் அதைச் செய்யக்கூடாது. அல்லாஹ் அல்லாதவருக்கு ஸு ஜூ து செய்வது ஷிர்க் எனும் கொடிய பாவமாகும்.

- இப்பொழுது நான் ஒரு கேள்வி கேட்கிறேன். அதன் பதில் உங்களுக்கும் தெரிந்திருக்கலாம். ஆதியில் மனிதன் எந்த மூலப் பொருளிலிருந்து படைக்கப்பட்டான்?

பாஷாவோ கமாலோ ... யாரும் பதில் சொல்லவில்லை. ஆமினாவும் ஃபாத்திமாவும் தம் தோழிகளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள் .... இப்படியாக பிள்ளைகளின் சைகைகள் அவர்களுக்குப் பதில் தெரியவில்லை என்பதை உணர்த்தியது.

ஜைனப் (குறுக்கிட்டாள்): மனிதன் மண்ணிலிருந்து படைக்கப்பட்டான்.

சலீம்: ஆம்! சரியான பதில். ஆனால் சில அதிமேதாவிகள் மனிதன் குரங்கிலிருந்து தோன்றினான் என்று சொல்வார்கள். அது தவறான கருத்து என்பதைச் சுட்டிக்காட்டத்தான் இந்தக் கேள்வியைக் கேட்டேன். மனிதனின் படைப்பு மண்சார்ந்த மூலங்களைக் கொண்டே ஆரம்பிக்கப்பட்டது. அதாவது, மண்ணிலிருந்து படைக்கப்பட்ட ஆதம் நபியில் இருந்துதான் மனிதர்கள் அனைவரும் தோன்றினார்கள்.

சலீம்: சரி, கதைக்கு வாருங்கள். ஆதத்தைப் படைப்பதற்கான மண்ணை பூமியிலிருந்து அல்லாஹ் எடுத்தான். அதில்-வெள்ளை, கருப்பு, அவ்விரண்டும் கலந்த சாம்பல் நிறம், சிவப்பு என பல நிறங்களைக் கொண்ட மண்களும் இருந்தன.

- இதனால்தான் இன்று மனிதர்களில் பல்வேறு நிறங்களை உடைவர்களைக் காண்கிறோம்.

அந்த மண், தண்ணீருடன் கலக்கப்பட்டு களி போல் ஆனது. பிறகு அது காய்ந்து - தட்டினால் ஓசை வரும் ஓடு ஆனது! பிறகு இறைவன் தனது ரூஹை - உயிரை அதில் ஊதினான். அதில் ...! ஆம்! அந்த உடலில் உயிர் வந்தது. அது அசைந்தது. மூச்சை உள்வாங்கி சுவாசித்தது! 'மனிதன்' ஆனது! ஆதம் தோன்றினார்!

## 5 - இப்லீஸ் எனும் எதிரி!

ஆதம் மெதுவாகக் கண்களைத் திறந்தார். மலக்குகள் எல்லோரும் அவருக்கு ஸு ஜூ து செய்து கொண்டிருக்கக் கண்டார். ஒருவன் மட்டும் ஸு ஜூ து செய்யாமல் தூரமாக விலகி நின்று கொண்டி ருந் தான். அவன் மட்டும் ஏன் விலகி நிற்கிறான்? அவன் யார்? அவனது பெயர் என்ன? - ஆதத்துக்கு எதுவும் புரியவில்லை!

ஸு ஜூ து செய்யாமல் நின்று கொண்டிருந்த அவனை நோக்கி அல்லாஹ் கேட்டான்:

ஆதத்துக்கு ஸு ஜூ து செய்யவிடாமல் உன்னைத் தடுத்தது எது? இப்லீஸ் மெதுவாக ஆனால் ஆணவத் துடன் சொன்னான்: நான் இவரை விடவும் சிறந்தவன். நீ என்னை நெருப்பினால் படைத்தாய். இவரையோ மண்ணினால்தானே படைத்தாய்? நான் ஏன் இவருக்கு ஸு ஜூ து செய்ய வேண்டும்?

அப்பொழுது இப்லீஸை நோக்கி அல்லாஹ் கேட்டான்: நீ எனக்குக் கீழ்ப்படிய மறுக்கிறாய். எனது கட்டளையை மீறுகி றாய். இங்கு பெருமையடிக்க உனக்கு உரிமை இல்லை. நீ வெளியேறி விடு. உனக்கு நீயே இழிவைத் தேடிக்கொண்டாய். சாபத்திற்குரியவனாய் ஆகிவிட்டாய்!

இதன் பிறகும் இப்லீஸ் தனது தவற்றைத் திருத்திக் கொள்ள வில்லை. மாறாக அல்லாஹ்வை நோக்கிச் சொன் னான்: இந்த ஆதத் தின் காரணத்தால்தான் நான் சாபத்துக்கு ஆளாகி விட்டேன். நான் இதற்குப் பழி வாங்கியே தீருவேன்!

- அல்லாஹ்வின் அருளை விட்டும் விரட்டப்பட்டவனாக இப்லீஸ் வெளியேறினான். ஆதத்தை நோக்கி கடுமையாக எச்சரிக்கை செய்து கொண்டு சென்றான்.

ஆதம் நபிக்கு எல்லாவும் ஆச்சரியமாக இருந்தது. தன்னைச் சுற்றி என்ன நடைபெற்றுக் கொண்டி ருக்கிறது என்று கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்.

- **அன்பையும் பாசத்தையும் உள்ளத்தில் உணர்ந்தார்.**
- **அத்துடன் பயமும் வெறுப்பும் அவருக்கு ஏற்படுகிறது!**

ஆம்! அவரைப் படைத்துக் கண்ணியப்படுத்திய அல்லாஹ் வின் பேரில் ஆழமான அன்பும் பாசமும் அவரது உள்ளத்தில் பொங்குகிறது. மலக்களை நோக்கி அவருக்கு ஸு ஜூ து செய்யுமாறு கட்டளையிட்டவனும் அதன் மூலம் அவரைக் கண்ணி யப்படுத்தியவனும் அல்லாஹ்தான்.

ஆனால் இப்லீஸை கோபத்துடன் அல்லாஹ் வெளியேற்றிது கண்டு ஆதம் பயந்து பொய்விட்டார்.

இப்லீஸின் நடவடிக்கை கண்டு ஆதத்துக்கு மிகவும் ஆச்சரியம். அல்லாஹ்வின் கட்டளைக்கு கீழ்ப்டியாமல் அவன் மேற் கொண்ட மோதல்போக்கு அவருக்குத் திகைப்பை ஏற்படுத்தியது மட்டுமல்ல, நான் உயர்ந்த படைப்பு என இப்லீஸ் பீற்றினானே - உமக்குத் தீமை விளைப்பேன் என்று ஆதத்தை நோக்கி அகங்காரத் துடன் சொன்னானே அதை நினைத்தாலே இப்லீஸ் மீது ஆதத்துக்க கடும் வெறுப்பு ஏற்பட்டது.

பாக்ஷா: அப்பா! இப்லீஸ் சொன்னது என்னவோ எனக்குச் சரியாகத்தான் படுகிறது. மண்ணை விட நெருப்புதானே சிறந்தது! இப்லீஸ் நெருப்பினால் படைக்கப்படவன் என்றால் அவன்தானே சிறந்த படைப்பு., ஆதத்தை விட!

சலீம்: இல்லை, நெருப்பு, மண்ணை விடச் சிறந்து என்பதை ஏற்க முடியாது. மண்தான் சிறந்தது. எப்படி என்று கேட்கிறாயா?

நெருப்பைப் பார்! அது ஆவேசத்துடன் மேல்நோக்கி சீறியெ ழுகிறது. எல்லாவற்றையும் எரித்துச் சிதைத்து விடு கிறது. ஆனால் மண்ணைப்பார். அதில் அமைதியும் உறுதியும் உள் ளது. எது ஒன்றையும் சுத்தீகரிக்கும் தன்மையே அதன் மகிமை!

மண்ணில் நீ விதைகளைத் தூவுகிறாய். அது - ஒவ்வொரு விதைக்குப் பகரமாக ஒரு நூறு தானியங்கள் கொண்ட கதிரை உனக்குத் தருகிறது!

மண்ணின் மகிமையை நீ மேலும் அறிந்துகொள்ள விரும்பினால் பசுமை கொஞ்சும் எழில்மிகு தோட்டங் களுக்கு நீ செல். எத்தனை எத்தனை சுவையான கனிகள். ஆழகான மலர்கள்! எங்கு திரும்பினாலும் மனதிற்குகந்த - ரம்மியமான நறு மணங்கள்! உடலுக்கும் இதயத்திற்கும் இதமான நிழல்கள்!

மட்டுல்ல, ஒரு வாத்திற்காக நெருப்புதான் சிறந்தது என்று வைத்துக் கொண்டாலும் - ஆதத்தைவிட இப்லீஸ்தான் சிறந்த வன் என்பதற்கு அது ஆதாரமாகாது!

ஏனெனில் அசல் சிறப்பானது என்பதால் அதிலிருந்து பிறந்த பொருளும் சிறப்பாகத்தான் இருக்க வேண்டும் என்ப தில்லை. சில நேரம் அதற்கு மாற்றமாகவும் இருக்கலாம். -அதாவது அசல் தரமிக்கதாக இருக்க அதிலிருந்து பிறந்த பொருள் தரம் தாழ்ந்ததாகவும் இருக்கலாம்.

ஓர் அரபுக் கவிஞன் அழகாகப் பாடினான்:

என் முன்னோர்கள் எத்துணை
சிறப்புக்குரியவர்கள் என்று - நீ
பெருமை பேசுகிறாய்!
இருக்கலாம்தான் ஆனால்
அவர்கள் ஏன் இவ்வளவு மட்டமான
பிள்ளைகளைப் பெற்றார்கள் என்பதுதான் கேள்வி!

## 6 - இப்லீஸ் யார்? ஷைத்தான் யார்?

கமால்: அப்பா! நாம் குர்ஆன் ஓதத் தொடங்கும்பொழுது முதலில் - அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம் என்று சொல்லி விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறோம்! அந்த ஷைத்தான் யார்? இந்த இப்லீஸ் யார்?

சலீம்: இதுவும் அவசியமான கேள்விதான்! சற்று விளக்க மாகவே சொல்கிறேன்., கேள்! ஆதியில் ஆதத்துக்கு ஸு ஜூ து செய்ய மறுத்த வனைத்தான் இப்லீஸ் என்கிறோம்!

ஆனால் ஷைத்தான் என்பது ஒரு பொதுவான வார்த்தை! அதன் அர்த்தம் என்னவெனில், தீமை நாடு பவன்., நலன்களை விட்டும் தூரமானவன் என்பதாகும். இதன்படி - தீமையைப் பரப்பக்கூடிய ஒவ்வொன்றும் ஷைத்தான்தான்! அப்படிப்பட்ட ஜின்னுக்கும் ஷைத்தான் என்று சொல்கிறோம். அப்படிப்பட்ட மனிதனுக்கும் ஷைத்தான் என்று சொல்கிறோம்.

இறைக்கட்டளைக்குக் கீழ்ப்படிய மாட்டேன் என்று மறுத்து ஆணவம் கொண்ட இப்லீஸு க்குக்கும் ஷைத் தான் என்று சொல்கிறோம். அவனுடைய சந்ததிகளுக்கும் ஷைத்தான்கள் என்கிறோம்.

முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் ஒருமுறை அபூ தர்ரு (ரலி) எனும் பிரபலமான தோழரை அழைத்துச் சொன்னார்கள். அபூ தர்ரே! ஜின் மற்றும் மனிதர்களிலுள்ள ஷைத்தான்களின் தீமை யிலிருந்து அல்லாஹ் விடம் பாதுகாப்புத் தேடுவீராக!

- அப்பொழுது அபூ தர்ரு கேட்டார்கள்: அல்லாஹ்வின் தூதரே! மனிதர்களிலும் ஷைத்தான் உண்டா? அதற்கு நபியவர்கள் ஆம் என்று பதில் அளித்துவிட்டு பின்வரும் குர்ஆன் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்:
இவ்வாறே நாம் ஒவ்வொரு நபிக்கும் - மனிதர்கள் மற்றும் ஜின்களில் உள்ள ஷைத்தான்களைப் பகைவர்களாக்கினோம். அவர்களில் சிலர், வேறு சிலரிடம் ஏமாற்றும் நோக்குடன் அலங்காரமான சொற்களைக் கூறிக்கொண்டே இருக்கிறார்கள்!

பாஷா: அப்பா! இப்பொழுதும் அந்த இப்லீஸ் உயிருடன் இருக்கிறானா?

சலீம்: ஆம்! அவன் நீண்ட காலம் வாழ்வதற்கு அவகாசம் கொடுக்குமாறு அல்லாஹ்விடம் இப்லீஸ் கேட்டான். அல்லாஹ்வும் அதற்கு அனுமதித்தான் என்று குர்ஆன் கூறுகிறது. இவ்வுலகம் எனும் சோதனைக் கூடத்தில் மனிதனைச் சோத னைக்கு உள்ளாக்க வேண்டும் என்பதே - இப்லீஸின் வழி கேட்டின் பின்னால் சென்று அழிவைத் தேடிக் கொள்கிறானா? அல்லது இறைவழிகாட்டலைப் பின்பற்றி நேர்மையாக வாழந்து வெற்றி பெறுகிறானா என்று பார்ப்பதே இறைவனின் நோக்க மாக இருக்கலாம் என்று தெரிகிறது.

பிள்ளைகளே! நன்றாத் தெரிந்து கொள்ளுங்கள்: இப்லீஸ் என்பவன் ஆதத்துக்கு மட்டும் விரோதி அல்ல., அவருடைய சந்ததிகளுக்கும் அதாவது மனிதர்கள் அனைவருக்கும் அவன் விரோதிதான்!

நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்! உலக வாழ்வில் சுயமாகச் செயல்படுவதற்கான சுதந்திரம் நமக்கு வழங்கப் பட்டுள்ளதால் நமது மனம்போன போக்கில் நாம் சென்று வழிதவறிப் போய்விடவும் கூடாது. இப்லீஸ் எனும் கொடிய விரோதியின் தீய ஊசாட்டங்களுக்குப் பலியாகி தீமைகளில் வீழ்ந்துவிடவும் கூடாது!

குர்ஆன் ஓதத் தொடங்கும்பொழுது - விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் பாதுகாப்புத் தேடுவதுபோன்று, தீய மனத்தை விட்டும் அதன் தீமைகளை விட்டும் அல்லாஹ்விடம் நாம் அடிக்கடி பாதுகாப்புத் தேடிக் கொண்டிருக்க வேண்டும்.

சலீம் கதைக்கு வந்தார்: சரி., கதையைக் கவனமாகக் கேளுங்கள். இப்லீஸ் எனும் எதிரியைப் பற்றி ஆதம் நன்கு புரிந்து கொண்டார். அவன்தான் தீமையின் முழு வடிவம் என்பதை அறிந்தார்!

ஆனால் மலக்குகள் நன்மை நாடுபவர்கள். ஏனெனில் அவருக்கு ஸு ஜூ து செய்தது மலக்குகள்தாம். இப்லீஸ்தான் அதற்கு உடன்படவில்லை. இதையெல்லாம் ஆதம் தெரிந்து கொண்டார். ஆனால் இது வரையில் தான் யார் என்பதுதான் ஆதத்திற்குத் தெரியாதிருந்தது!

பிறகுதான் ஆதத்துக்கு அவரது உண்மை நிலைபற்றி அல்லாஹ் அறிவித்துக் கொடுத்தான். அவரைப் படைத்ததன் தத்துவத்தையும் அவரைக் கண்ணியப்படுத்தியதன் இரகசியத் தையும் தெளிவுபடுத்திக் கொடுத் தான்!

## 7 - ஹவ்வாவுடன் ஆதம்!

எவ்வாறு ஆ தம் நபியை - அதாவது உலகின் முதல் மனிதரைச் சிறப்புக்குரிய படைப்பாக அல்லாஹ் ஆக்கினான் என்பதை சலீம் விவரித்தார்.

**அல்லாஹ் ஆதத்துக்கு எல்லாப் பெயர்களையும் கற்றுக் கொடுத்தான்**

அதாவது உலகிலுள்ள எல்லாப் பெயர்களையும் பெயர் சூட்டி அழைப்பதற்குக் கற்றுக்கொடுத்தான். அல்லது அதற் கான ஆற்றலை வழங்கினான் என்றும் பொருள் கொள்ளலாம்.

இதனை மரம் என்று சொல்ல வேண்டும் என்றும் இதேபோல இது வீடு, இது காடு, இது மலை, இது கடல், இது பறவை, இது விலங்கு என்று ஒவ்வொரு பொருளையும் தனித்தனிப் பெயர் கொண்டு அழைக்க வேண்டும் என்று ஆதம் அறிந்து கொண்டார்.

இப்படிப்பட்ட அறிவுஞானம்தான் மனிதனின் தனிச்சிறப்பு. இறைவன் கொடுத்த பெரும் அருட்கொடை! இதன் மூலம் தான் மனிதன் உலகிலுள்ள பொருட்களைப் பெயர் சூட்டிப் புரியவும் புரியவைக்கவும் பேசவும் தெரிந்து கொண்டான்.

ஆம், இந்த ஆற்றலை மனிதனுக்கு இறைவன் வழங்க வில்லையெனில் எது ஒன்றையும் புரியவோ புரிய வைக்கவோ சாதாரணமாக மனிதனால் முடிந்திருக்காது. எது ஒன்றையும் கண்ணெதிரில் காண்பித்தால்தான் புரிந்து கொள்ள முடிந்தி ருக்கும். அந்நிலையில் மனிதனின் அறிவு இவ்வளவு தூரம் வளர்ச்சி அடைந்திருக்க முடியாது.

ஜைனப்: இதற்கு ஓர் எளிமையான உதாரணம் சொல்லுங்கள். பிள்ளைகள் இலகுவாகப் புரிந்து கொள்வார்கள்.

சலீம்: இதோ! பாருங்கள்! நமது தோட்டத்தில் மாமரம் உள்ளது. அதிலிருந்து ஒரு மாங்கனி பறித்து வருமாறு நான் பாஷாவுக்குச் சொல்கிறேன். ஆனால் அந்த மரத்துக்கு மாமரம் என்று பெயர் என்பது கமாலுக்கு தெரியாது என்று வைத்துக் கொள்ளுங்கள். மரத்தைக் கண்முன்னால் அவனுக்குக் காட்டினால் தான் அதைப் புரிந்து கொள்வான்., அதிலிருந்து கனி ஒன்றைப் பறித்துவருவான், இல்லையா? இத்தகைய ஞானத்தைத்தான் ஒவ்வொரு பொருளுக்கும் பெயர் சூட்டி அடையாளப்படுத்தும் அறிவைத்தான் ஆதத்துக்கு இறைவன் வழங்கினான். இதுவே மனிதனின் தனிப்பெரும் சிறப்பாகும்.

சரி, கதைக்கு வாருங்கள்.

இத்தகைய கல்வியை ஆதம் கற்றுக்கொண்ட பிறகு அல்லாஹ் அந்தப் பொருட்களை மலக்குகளிடம் காண்பித்து நீங்களும் இவரைப் போல் இந்தப் பொருட்களின் பெயர்களை அறிவித்துத் தாருங்கள் என்று கூறினான்.

அல்லாஹ் முன்வைத்த பொருட்களை மலக்குகள் பார்த் தார்கள். அவற்றின்பெயர்கள் அவர்களுக்குத் தெரியவில்லை. அதனை அவர்கள் ஒப்புக்கொண்டார்கள்.

**குறையேதுமில்லாத தூயவன் நீயே! நீ எங்களுக்குக் கற்றுக்கொடுத்ததைத் தவிர வேறு எந்த ஞானமும் எங்களுக்கு இல்லை. திண்ணமாக நீயே பேரறிவும் மிக்க ஞானமும் உடையவன் என்று மலக்குகள் கூறினார்கள்.**

பிறகு ஆதத்தை நோக்கி அல்லாஹ் சொன்னான்: ஆதமே! இந்தப் பொருட்களின் பெயர்களை மலக்கு களுக்கு அறிவித்துக் கொடுங்கள். ஆதம் எல்லாப் பொருட்களின் பெயர்களையும் மலக்குகளுக்கு அறிவித்துக் கொடுத்தார்.

இப்பொழுதுதான் மலக்குகளுக்கப் புரிந்தது ஆதத்துக்கு ஸு ஜூ து செய்யுமாறு தங்களை நோக்கி அல்லாஹ் ஏன் கட்டளையிட்டான் என்பது! மேலும் ஆதம் பூமியில் பிரதிநிதி யாக ஆகுவார்., அதில் எல்லா வற்றையும் கையாளுவார்., அதிகாரம் செலுத்துவார்!அதற்னாக கல்விஞானம் அவருக்கு உண்டு என்பதையும மலக்குகள் புரிந்து கொண்டார்கள்.

மலக்குகள் சதாவும் அல்லாஹ்வை வழிபடுவதிலேயே ஈடுபட்டிருந்தார்கள். அவனைப் புகழ்வதிலும் அவனது மேன்மை யைப் போற்றுவதிலும் மூழ்கியிருந்தார்கள்.

ஆதம் தனிமைப்பட்டிருப்பதாக உணர்ந்தார். விரக்தி அடைந்தார். சிரமப்பட்டார். ஒருநாள் ஆதம் உறங்கினார். விழித்தபொழுது அவரது தலை அருகில் ஒரு பெண்! ஆழகான முகம், பளிங்கு போன்ற இரு விழிகள். ஆதம் அந்தப் பெண்ணை நோக்கினார். அவள் கனி வான கருணையான பார்வையை ஆதமை நோக்கி வீசினாள்.

ஆதம் கேட்டார்: நான் தூங்குவதற்கு முன்பு நீ இங்கு இல்லையே!"

ஆம்"

நான் தூங்கிக் கொண்டிருக்கும்போதுதான் வந்தாயா?"

ஆம்

எங்கிருந்து வந்தாய்?"

உம்மில் இருந்தே வந்தேன். நீர் தூங்கிக்கொண்டிருந்த போது உமது நெஞ்சத்திலிருந்து அல்லாஹ் என்னைப் படைத்தான். இப்பொழுது நீர் விழித்திருக்கும் நிலையில் உம் நெஞ்சோடு என்னை அணைத்துக் கொள்கிறீரா?"

ம்ம் ... எதற்காக அல்லாஹ் உன்னைப் படைத்தான்?"

நீர் என் பக்கம் அமைதி பெறுவதற்காகத்தான்"

ஆதம் ... எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! தனிமையில் மாட்டிக் கொண்டோமே என்று நான் கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். அல்லாஹ் உன்னை வழங்கியது பெரும் பாக்கியமே!" என்று சொன்னார்.

ஆதத்திடம் மலக்குகள் கேட்டார்கள்: ஆதமே! இவளது பெயர் என்ன?"

ஆதம் சொன்னார்: இவளது பெயர் ஹவ்வா"

மலக்குகள் கேட்டார்கள்: ஹவ்வா என்று ஏன் பெயர் சூட்டுகிறீர்?"

ஆதம் சொன்னார்: அவன் என்னிலிருந்து படைக்கப்பட் டாள். நான் ஹய்யு - உயிருள்ளவன். உயிருள்ள என்னில் இருந்து தோன்றியவள் என்பதால் அவள் ஹவ்வா!"

## 8 - இலைகளே ஆடைகளாய் ...!

ஆதமும் ஹவ்வாவும் சுவனத்தில் வசிக்குமாறு அல்லாஹ் கட்டளையிட்டான். இருவரும் அங்கே சென்றார் கள். மிகவும் மகிழ்வான - இன்பமான வாழ்க்கையை அங்கு அனுபவித்தார்கள். அதேபோல மிகவும் கசப்பான ஓர் அனுபவமும் அங்கு அவர்களுக்கு ஏற்பட்டது.

அது என்ன கசப்பான அனுபவம் என்று கேட்கிறீர்களா? சொல்கிறேன், கேளுங்கள்.

ஆதம்-ஹவ்வா இருவருக்கும் சுவனத்து வாழ்க்கை ஆனந்தமாக இருந்தது. விரும்பிதெல்லாம் அங்கு அவர்களுக்குக் கிடைத்தது. அதற்கு ஓர் உதாரணம் வேண்டுமெனில் தூக்கத்தில் நாம் கனவு காண்கிறோமே அதனைக் குறிப்பிடலாம். கனவில் எல்லாவும் நடைபெறுகிறது. நிஜ வாழ்க்கையில் செல்ல முடியாத இடங் களுக்கெல்லாம் கனவில் செல்கிறோம். நிஜ வாழ்க்கையில் காணமுடியாத காட்சிகளையெல்லாம் கனவில் காண்கிறோம். எல்லாவற்றையும் அனுபவிக்கிறோம். சுவனத்திலும் அப்படித்தான்! ஆதம்- ஹவ்வாவுக்கு சுவனத் தில் எல்லாம் கிடைத்தன. விரும்பியதெல்லாம் விரும்பிய நேரத்தில் வழங்கப்பட்டன.

சுவையான உணவு, இனிமையான பானம், உல்லாசமான வீடு! அன்பும் அமைதியும் இன்பமும் நிறைந்த வாழ்வு! ஒவ்வொரு பொருட்களின் வர்ணங்களே அழகாய் இருந்தன. எதைத் தொட்டாலும் நறுமணம்! எங்கு சென்றாலும் ஆனந்தம்.

ஆதத்திற்கு பெரும் மகிழ்ச்சி! ஹவ்வாவும் உடன் இருந்ததால் ஒரே இன்பவாழ்வுதான்! ஆதமும் ஹவ்வா வும் குதூகலமாக உரையாடுவார்கள். விளையாடுவார்கள். எங்கு சென்றாலும் இணைபிரியாமல் சுற்றித்திரிந் தார்கள்.

புறவைகளின் ரீங்காரத்தையும் நீர் வீழ்ச்சிகளின் தஸ்பீஹையும் கேட்டு மகிழ்ந்தார்கள். கவலை - கஷ்டம் என்ன என்பதே அவர்களுக்குத் தெரியாதிருந்தது!

அல்லாஹ் ஆதத்திற்கும் ஹவ்வாவுக்கும் சுவனத்தில் முழுசுதந்திரம் வழங்கியிருந்தான். எங்கும் செல்ல லாம். எல்லாவற்றையும் அனுபவிக்கலாம். ஆனால் ஒரே ஒரு கட்டுப்பாடு! குறிப்பிட்டதொரு மரத்தைச் சுட்டிக் காட்டி இந்த மரத்தின் பழங்களை நீங்கள் உண்ணக்கூடாது என்று தடுத்தான்.

நீங்கள் இருவரும் இந்தமரத்தை நெருங்காதீர்கள். அப்படிச் செய்தால் நீங்கள் அநீதி செய்தவர்களாய் ஆவீர்கள். என்று கூறினான்.

கமால்: அதென்ன? எல்லாவற்றையும் அனுபவிக்கலாம். ஒரு குறிப்பிட்ட மரத்தை மட்டும் நெருங்கக்கூடாது என்று தடை! அப்படி என்ன மரம் அது?

சலீம்: அது என்ன மரம் என்றவிவரம் குர்ஆனில் இல்லை. அது பற்றிய தகவல் ஆதாரப்பூர்மாய் கிடைக்க வில்லை.

ஜைனப்: ஆதம் - ஹவ்வா கதை பற்றி பெரியவர்கள் சிலர் சொல்லும்போது சுவனத்தில் தடையை மீறி அவ்விருவரும் சாப்பிட்ட கனி கோதுமைக் கனி என்கிறார்களே, அது சரியா?

சுலீம்: இதுவெல்லாம் யூகமான பேச்சுகள்! அது என்ன மரம்? என்ன பழம் என்பதை அல்லாஹ்தான் அறிவான்.

பாஷா: அந்த மரத்தில் அப்படி என்ன கேடு இருந்தது? அதன் அருகில்கூட நெருங்கக்கூடாது என்று அல்லாஹ் ஏன் தடைசெய்தான்?

சலீம்: அந்த மரத்தின் அருகில்கூட செல்லக்கூடாது என்று ஆதத்க்கும் ஹவ்வாவுக்கும் அல்லாஹ் தடை விதித்ததால் அது கேடு விளைவிக்கும் மரமாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. ஒரு கட்டுப் பாட்டை விதித்து ஆதத்தையும் ஹவ்வா வையும் சோதிக்க விரும்பினான் அல்லாஹ்என்பதே உண்மை.

(சலீம் கதையைத் தொடர்ந்தார்) குறிப்பிட்ட அந்த மரத் தின் கனியை மட்டும் உண்ணக்கூடாது என்பதை ஆதமும் ஹவ்வாவும் புரிந்து கொண்டார்கள்.

ஆனாலும் அலைபாயும் மனமும் மறதியும் ஆதத்திடம் இயல் பாய் அமைந்திருந்தன. அதனால் இறைவன் விதித்த கட்டுப் பாட்டின் விஷயத்தில் ஆதத்தின் உறுதி பலவீனமடைந்தது.

ஆதத்தின் இந்த பலவீனத்தை ஷைத்தானும் பயன் படுத்திக் கொண்டான். அவனது மனத்தில் ஆதத் தின் பேரில் கடும் குரோதம் இருந்தது. அதனை வெளிக்காட்டிக் கொள்ளாமல் அவரிடம் சென்று கதை அளப்பான் இப்லீஸ். இது பலநாட் களாகத் தொடர்ந்தது. ஷைத்தான் ஒரு நாள் சொன்னான்:

ஆதமே! இந்த மரத்தின் அருகே நெருங்கக்கூடாது என்று அல்லாஹ் ஏன் உங்களைத் தடுத்திருக் கிறான் தெரியுமா? அது நித்திய மரம்., இந்த மரத்தின் கனியை நீங்கள் புசித்தால் பிறகு எக்காலமும் நீங்கள் மரணம் அடையமாட்டீர்கள். நிரந்தரமாக வாழ்ந்து கொண்டிருக்கலாம்...நீங்கள் இருவரும் இந்த மரத்தின் கனியை லேசாக ருசித்துப் பார்த்தால் புரிந்து கொள்வீர்கள்"

நாட்கள் கழிந்தன... அந்த மரத்தைப் பற்றி ஆதமும் ஹவ்வாவும் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். என்ன மரம் அது? அதன் கனி எப்படி இருக்கும்? என்று பலவித எண்ணங்கள் தோன்றின, அவர்களின் உள்ளத்தில்!

பிறகு ஒரு நாள் அந்த மரத்தின் கனியையும் ருசி பார்க்க வேண்டியதுதான் என்கிற முடிவுக்கு வந்தார் கள். இப்லீஸ் அவ்விருவரின் பழைய விரோதி என்பதை அடியோடு மறந்தே போயினர். அவன் விரித்த சூழ்ச்சி வலையில் இருவரும் சிக்கி னார்கள்.

ஆம்! அந்த மரத்தை நோக்கி கையை நீட்டி ஒரு கனி யைப் பறித்தார் ஆதம். அதனை அன்புடன் ஹவ்வாவிடம் கொடுத்தார். பிறகு மற்றொரு கனியைத் தனக்காகப் பறித்தார். தடை செய்யப்பட்ட அந்த மரத் தின் கனியை இருவரும் ருசித்தனர்.

கனியைச் சுவைத்துக்கொண்டிருக்கும்போதே ஆதத்தின் நெஞ்சம் படபடத்தது! திடீரென நோவையும் துயரத்தையும் வெட்கத்தையும் உணர்ந்தார்! சுற்றிலும் மாற்றமான நிலையை உணர்ந்தார். தன்னுள் இருந்த ஓர் இன்பமான நிலையை இழந்தது போன்ற ஒரு பிரமை ஏற்பட்டது!

அவரும் அவருடைய மனைவியும் நிர்வாணமாக இருப்பதாக உணர்ந்தார்கள். இருவரும் அவசர அரசர மாக இலை தழைகளைப் பறித்தார்கள். அவற்றின் மூலம் தங்கள் உடல்களை மறைத்துக்கொண்டார்கள் ... சுவனத்திலிருந்து வெளி யேறுமாறு ஆதத்துக்கும் ஹவ்வாவுக்கும் அல்லாஹ் ஆணை பிறப்பித்தான்!

## 9 - உலகமும் கடின உழைப்பும்

ஆதமும் ஹவ்வாவும் சுவனத்தை விட்டும் வெளியேறினார்கள். புமியில் இறங்கினார்கள்.

ஆதம் மிகவும் கவலையுடன் இருந்தார். ஹவ்வா ஓயாது அழுது கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள். இருவரும் தாங் கள் செய்த பாவத்தை எண்ணி மனம் வருந்தி அல்லாஹ் விடம் மன்னிப்புக் கோரினார்கள். அல்லாஹ் அதனை ஏற்று அவர்களை மன்னித்து அவ்விருவர் மீதும் கருணை பொழிந் தான்.

ஜைனப்: ஷைத்தானின் வலையில் முதலில் வீழ்ந்தது ஆதமா? ஹவ்வாவா? ஆனால் ஆதம்நபி கதையில் நம்முடைய மூதாட்டிகள் சொல்வது என்னவெனில், ஷைத்தானின் பசப்பு வார்த்ததையை முதலில் நம்பியது ஹவ்வாதான்! ஷைத்தானின் தீய ஊசாட்டத்திற்குப் பலியாகிய ஹவ்வாதான் பிறகு ஆதத் தைப் படிப்படியாக வழிகெட வைத்தாள்! இவ்வாறாக பழத்தைச் சுவைத்தன் பழியை ஹவ்வா மீது போடுகிறார்களே! இது சரியா?

சலீம் : இப்படிச்சொல்வது முற்றிலும் தவறு! அநீதியும்கூட! பெண்ணினத்தைத் தரம் தாழ்த்துவதற்காக இட்டுக்கட்டப்பட்ட கற்பனையாகும் இது! ஷைத்தானின் தீய ஊசாட்டத்திற்குப் பலியானதில் ஆதம்-ஹவ்வா இருவருக்கும் சமபங்கு உண்டு. இதுதான் உண்மை!

(சலீம் கதையைத் தொடர்ந்தார்)

ஆதம்-ஹவ்வா இருவரும் பூமியில் இறங்கினார்கள். இந்த பூமிதான் அவர்களது உறைவிடம் என்பதை ஆதத்துக்கும் ஹவ்வாவுக்கும் அல்லாஹ் அறிவித்தான். இருவரும் இங்கு தான் வாழ வேண்டும். இங்குதான்

மரணம் அடைந்திட வேண்டும். மீண்டும் உயிருடன் எழுப்பப்படும் அந்த மறுமை நாளில் பூமியிலிருந்தே வெளியே வர வேண்டும் என்றும் தெளிவுபடுத்தினான்.

❁ ஆதம் -ஹவ்வா இருவரின் வாழ்க்கை பூமியில் தொடங் கியது! பூமியிலோ ... மண்ணும் ... உழைப்பும் ... களைப்பும் ... கஷ்டமும்! சுவனத்திலோ மிகவும் நிம்மதியான சுகமான வாழ்க்கை கிடைத்தது! அடடா! அதைத் தொலைத்து விட்டோமே என்று ஆதம் மனம் நொந்துகொண்டிருந்தார்!

❁ இங்கு பூமியில் ...வசிப்பதற்கான வீட்டை அவரே கட்டிக்கொள்ள வேண்டும். வெயில், மழை, கோடை, குளிர் ஆகியவற்றிலிருந்து பாதுகாப்பு வசதி செய்து கொள்ள வேண்டும்.

உண்பதற்கான உணவு தானியங்களை ஆதமே விவசாயம் செய்து கொள்ள வேண்டும். பாதுகாப்பான ஆடைகளைத் தயார் செய்துகொள்வதும் அவரது பொறுப்பே. தன்னுடைய மனைவி மக்களையும் அவரே பாதுகாத்திட வேண்டும். மட்டுமல்ல பூமியில் சுற்றித்திரியும் சிங்கம், புலி, கரடி போன்ற கொடிய விலங்கு களிடம் சிக்கிவிடாமலும் இருக்கவேண்டும். அதற்கான ஆயுதங்களையும் அவரே தயார் செய்து வைத்துக் கொள்ள வேண்டும்.

இதற்கிடையே இப்லீஸின் பகைமை உலகத்திலும் தொடர்ந்து கொண்டிருந்தது. அவனது விஷயத்திலும் இங்கு அவர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஆதமும் ஹவ்வாவும் சுவனத்திலிருந்து வெளியேறக் காரண மாக இருந்த அதே இப்லீஸ்தான்-அவர்கள் மீண்டும் சுவனம் சென்று விடக்கூடாது என்பதற்கான சூழ்ச்சி வலை பின்னத் தொடங்கினான். பூமி யிலும் வந்து ஆதத்தையும் அவர்தம் சந்ததிகளையும் வழி கெடுத்துக் கொண்டிருந்தான்! இறைக்கட்டளைகளை மீறி நடக்குமாறும் பாவங்கள் செய்யுமாறும் அவர்களைத் தூண்டிக் கொண்டிருந்தான்.

ஆத்திடம் அல்லாஹ் மிகத் தெளிவாக அறிவித்தான்:

❁ என்னிடமிருந்து உங்களுக்குக் கிடைக்கும் நேர்வழியை யார் பின்பற்றி வாழ்கிறார்களோ அவர்களுக்குச் சுவனம் வெகு மதியாக வழங்கப்படும். அவர்களுக்கு எந்தப் பயமும் இல்லை. அவர்கள் துயரப்படவும் மாட்டார்கள்.

❁ ஆனால் எவர்கள் இறைவழிகாட்டலைப் பின்பற்றாமல் இப்லீஸின் தீய வழியைப் பின்பற்றினார்களோ அவர்கள்மீது இறைவனின் கோபம்தான்! அத்தகையவர்கள் அனைவரும் - இப்லீஸு டன் சேர்ந்து நரகம்தான் செல்ல வேண்டிது வரும்!

இவ்வாறு நன்மைக்கும் தீமைக்கும் மத்தியில் போராட்டம் தொடர்ந்தது!

துன்பத்துடன் தொடங்கிய இவ்வுலக வாழ்க்கையில் இந்த எல்லா விவரங்களையும் ஆதம் நன்கு அறிந்து கொண்டார்.

ஆதம் நபியின் கவலையைக் குறைத்தது ஒரே ஒரு விஷயம்தான்! அது என்னவெனில் இப்பூவுலகில் அதிகாரம் செலுத்தும் அரசராக ஆதம் இருந்தார். இந்தப் பூமியில் வீடு வாசல்களைக் கட்டி விவசாயம் செய்து வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிடவும் வளம் சேர்த்திடவும் சகல அதிகாரங்களும் பொறுப்புகளும் ஆதத்திடம் ஒப்படைக்கப்பட்டிருந்ததுதான் அவருக்கு சற்று ஆறுதலாக இருந்தது!

மட்டுமல்ல, நல்ல பிள்ளைகளை - ஆற்றல் மிக்க சந்ததிகளைப் பெற்றெடுக்கும் சக்தியையும் இறைவன் அவருக்கு வழங்கியிருந்தான். ஆதம் - ஹவ்வா தம்பதிகளிலிருந்து அத்த கைய நன்மக்கள் தோன்றினார்கள். வாழ்க்கை வசதிகளையும் அமைப்பையும் இன்னும் சிறப்பாக மாற்றியமைக்கும் திறமை பெற்றிருந்தனர்! இவை யாவும் ஆதம் நபியின் கவலையையும் துயரத்தையும் ஓரளவு குறைத்தது!

## 10 - ஆதம் நபியின் மரணம்

நாட்கள், மாதங்கள், வருடங்கள் எனக் காலச் சக்கரம் சூழன்றது! பற்பல ஆண்டுகள் கழிந்தன!

ஓர் இரவு வந்தது. காற்று படுவேகமாகச் சுழன்று சுழன்று அடித்தது!

ஆதம் நபி வளர்த்து உருவாக்கிய - நெடிதுயர்ந்த மரங்களில் இருந்து இலைகள் பொலபொலவென உதிர்ந்தன. பலமான காற்றை எதிர்த்து நிற்க முடியாமல் மரக்கிளைகள் வில்லாய் வளைந்து அருகிலிருந்த ஏரியில்-தண்ணீரில் அந்தக் கிளைகள் மூழ்கி மூழ்கி உயர்ந்தன. அப்படி உயரும்போது கிளைகளிலிருந்து நீர்த்துளிகள் சலசலவெனக் கீழே விழுந்து பெரும் ஓசையை எழுப்பியது.

தூரத்திலிருந்து பார்ப்பதற்கு அது ஒரு வித்தியாசமான காட்சியாக அமைந்தது. ஏதோ! அம்மரங்களின் ‘உச்சந் தலைகளில்’ துன்பம் வந்து இறங்கியது போன்றும் அவை தலையைக் கவிழ்த்துத் தண்ணீரில் முக்கி எடுத்து அழுது புலம்புவது போன்றும் தோன்றியது!

ஆம்! உண்மை நிலவரமும் அதுவே! ஆதம் நபி வளர்த்து உருவாக்கிய அந்த எல்லா மரங்களும் பெரும் கவலைக்குள் ளாகி இருந்தன! கிளைகளிலிருந்து இலைகள் உதிர்ந்து தமது கடும் துயரத்தை நிலத்தில் கொட்டின!

வானத்திலிருந்து நட்சத்திரங்கள் உதிர்ந்தன! வெண்ணிலாவோ ... ஒளி உமிழும் தனது திருமுகத்தை மெல்ல உயர்த்தி அமைதியாகப் பூமியின் பக்கம் எட்டிப்பார்த்தது!

நிலாவுக்குப் புரிந்தது, ஏதோ ஒரு மாபெரும் நிகழ்வு பூமியில் நிகழப்போகிறது என்று! ஆனால் அது என்ன என்பது தான் அதற்குப் புலப்படாமல் இருந்தது.

வெண்ணிலா தனது ஒளிச்சுடர்களுக்கு ஆணை பிறப் பித்தது. மண்ணுக்கு விரைந்து சென்று தீர விசாரித்து செய்தி கொண்டு வர வேண்டும் என்று!

உடனே அந்த நிலா ஒளிக்கற்றை உமிழ்ந்த வண்ணம் பூமியை வட்டமிட்டுக்கொண்டு உலா வந்தது. மலைகள், நதிகள், திடல்கள் ஆகியவை மீது வெளிச்சம் பாய்ச்சி உற்று நோக்கியது. அதன் ஆச்சரியம் மேலும் அதிகரித்தது. ஆம! பூமியின் இந்த பிரமாண்டமான படைப்புகள் அனைத்தும் ஏதோ ஒரு கடுமையான கவலையில் வாடிக்கிடந்தன. எங்கும் ஒரே சோகம்! மீளாத் துயரம் வியாபித்திருந்தது.

வெண்ணிலா அப்படியே வட்டமிட்டுக் கொண்டு வந்து ஆதம் நபியின் வீட்டில் ஒளி வீசியது. அண்டசரா சரமெல்லாம் துயரத்தில் ழ்கியிருப்தன் இரகசியம் என்ன? எப்படியேனும் அதைத் தெரிந்து கொள்ள வேண்டு மென நிலவு பெரும் முயற்சி செய்து கொண்டிருந்தது.

ஆதத்தில் முகத்தில் ஒளி படர்ந்தது! அவரது முகம் சந்திரனை விடவும் பிரகாசமாகவும் அழகாகவும் இருந்தது. அப்போதுதான் ... நிலா புரிந்து கொண்டது ஆதத்திற்கு மரண நேரம் நெருங்கிவிட்டது என்பதை! உடனே எல்லாப் படைப்பினங்களுடனும் சேர்ந்து அந்த முழுநிலவும் கண் கலங்கியது! அதன் ஒளி முகத்தில் இருள் படர்ந்தது!

சிறியதொரு வீடு!அததான் ஆதம் நபியின் இல்லம். இலை தழைகளும் மலர்களும் நிறைந்த விரிப்பில் ஆதம் படுத்திருந் தார். வெண் தாடி... பேரழகு தவழந்த முகம்...

ஆதம் நபியைச் சுற்றி - சோகமே வடிவாய் அவருடைய பிள்ளைகள் நின்று கொண்டிருந்தார்கள். மரணம் தழுவும் முன்பு ஆதம் இறுதி உரை வழங்க இருப்பதை எல்லாரும் எதிர்பார்த்துக் காத்திருந்தனர்!

ஆதம் மெல்ல கண் திறந்து தம் மக்கள் அனைவரையும் ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தார். திருவாய் மலர்ந்து மெது வாகப் பேசினார்.

❀ என் அருமை மக்களே! கண் கலங்காதீர்கள். கவலைப்படாதீர்கள். நான் உங்களுக்குச் சொல்வ தெல்லாம்...

❀ உங்களைப் படைத்த இறைவனுக்கு நன்றி செலுத்துங்கள். ஒவ்வவொரு கணமும் அருட்கொடை களை வாரி வழங்கும் அந்த இறைவனுக்கு நன்றி கொல்லாதீர்க்ள்.

❀ இறைவனை வணங்கி வழிபடுங்கள். அவன் வழங்கும் நேர்வழியில் வாழுங்கள். அவனுடைய கட்ட ளையை உறுதியாகப் பின்பற்றிக்கொள்ளுங்கள்.

❀ அதுவே உங்களைப் பாதுகாக்கும் அரண். உங்களைக் காப்பாற்றிக் கரை சேர்க்கும் கப்பல் என்பதை அறிந்து கொள் ளுங்கள்"

--- தந்தையின் மரணத்தை நினைத்து துயரமே வடிவாய் நின்று கொண்டிருக்கும தம் சந்ததிகளைச் சாந்தப்படுத்தினார் ஆதம். அவர்களுக்குத் தைரியம் ஊட்டும் வண்ணம் மேலும் சொன்னார்:

❀ அருமை மக்களே! துயரப்படாதீர்கள். அல்லாஹ் மனி தனை உலகில் வெறுமெனே - ஆதரவற்ற நிலையில் விட்டு விட மாட்டான். உலகத்தில் மனித குலத்திற்கு நேர்வழிகாட்ட நிச்ச யம் அல்லாஹ் நபிமார்களை அனுப்பித் தருவான்.

❀ அந்த நபிமார்கள் பல்வேறு காலகட்டங்களில் - பற்பல தேசங்களில் தோன்றுவார்கள். ஆயினும் அவர்கள் அனைவரி டத்திலும் ஓர் ஒற்றுமை இருக்கும். அதுதான் - அல்லாஹ்வின் பக்கம் அழைக்கும் பணி! எல்லா நபிமார்களும் செய்வதும் அந்தப் பணியைத்தான். எனவே நீங்கள் அனைவரும் அந்த நபிமார்களுக்குக் கீழ்ப்படிந்து வாழுங்கள். அவர்கள் காட்டும் வழியைப் பின்பற்றுங்கள்"

இதுதான் ஆதம் நபியின் இறுதி உரை. பிறகு ஆதம் கண்களை மூடினார்...! மலக்குகள் வந்து ஆதத்தை சூழ்ந்து கொண்டார்கள். அவருக்கு வாழ்த்துகள் கூறி மறுமைக்கு அழைத்துச் செல்ல வந்தார்கள். வந்திருப்பவர்களில் மரணத்தின் மலக்கு யார் என்பதை ஆதம் அறிந்து கொண்டார். ஆதத்தின் உயிரை அந்த மலக்கு கைப்பற்றினார்.

ஆதத்தின் உள்ளம் புன்னகை பூத்தது. அவரது ஆன்மா மீது சுவனத்து மலர்கனின் வாசைன கமழ்ந்து கொண்டிருந்தது!

# 11 படிப்பினைகள்

ஜைனப்: ஆதம் நபி பற்றி பல நூல்களில் படித்திருக்கிறேன். பெரியவர்கள் சொல்லவும் கேட்டிருக்கிறேன். ஆனால் இன்று நீங்கள் கதை சொன்னமுறை வித்தியாசமாக இருந்தது. எல்லா விவரங்களையும் தெளிவாக எடுத்துரைத்தீர்கள். பய னுள்ள வகையில் கதையை நிறைவு செய்தீர்கள்.

சலீம்: இன்னும் சில விவரங்கள் உள்ளன. அவற்றையும் சொல்லிவிடுகிறேன்.

ஆதம் நபி மரணத்தருவாயில் தம் பிள்ளைகளுக்கு எடுத் துரைத்த அறிவுரைகள் மிகவும் பயனுள்ளவை ஆகும். நாம் அவற்றை மறந்துவிடக்கூடாது.

முதலாவதாக -அல்லாஹ்வை வணங்கி வழிபட்டு அவனு டைய ஆணைகளுக்குக் கீழ்ப்படிந்து வாழ வேண்டும். அவ னுக்கு நன்றி செலுத்த வேண்டும் என்பது! இதுதான் நம்மைக் காப்பாற்றிக் கரைசேர்க்கும் ஒரே ஆயுதம் என்று சொன்னார் கள். இதனை நாம் என்றென்றும் நினையில் வைத்திருக்க வேண்டும்.

இரண்டாவதாக கல்வியின் சிறப்பு. ஆதம் நபி பெற்றச் சிறப்பின் இரகசியமே அதுதான். இறைவன் ஆத்துக் குக் கல்வியை அளித்துச் சிறப்பித்தான். அதன் அடிப்படையில்தான் அவருக்கு ஸு ஜூ து செய்யுமாறு மலக்கு களுக்குக் கட்டளை யிட்டான்.

மூன்றாவதாக - இறைக் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதன் அவசியம். ஆதத்துக்கு ஸு ஜூ து செய்யுமாறு அல்லாஹ் இட்ட கட்டளையை ஏற்க மறுத்தான் இப்லீஸ். ஆணவம் பேசினான்! விளைவு? இறைவனின் திருச்சன்னி தானத்தில் இருந்து இப்லீஸ் விரட்டப்பட்டான். அருட்பாக்கியம் இழந்தான்!

பிள்ளைகளே! நான்றாகத் தெரிந்து கொள்ளுங்கள். கல்வி கற்பதிலும் கற்றபடி பணிவுடன் நடப்பதிலும்தான் நமக்கு உயர்வு உள்ளது.

இன்னொரு முக்கியமான படிப்பினை என்னவெனில், பிறப்பை வைத்து உயர்வு -தாழ்வு உண்டாக்குவது மூடத்தனமான - முறையற்ற போக்காகும்.

இப்லீஸ்தான் அப்படிச் செய்தான். நான் நெருப்பினால் படைக்கப்பட்டவன்., நான் உயர்ந்தவன். மண்ணினால் படைக் கப்பட்ட ஆதம் என்னை விடத் தாழ்ந்தவர்தான் என்று குதர்க்கம் பேசினான். இத்த கைய கர்வம்தான் இறைக்கட்டளைக்குக் கீழ்ப்படிய விடாமல் இப்லீஸை தடுத்தது!

- இவன் உயர்ந்த ஜாதி., அவன் தாழ்ந்த ஜாதி என்று பிறப்பின் அடிப்படையில் இனத்தின் அடிப்படையில் மக்களை வேறுபடுத்துவதை இன்றைக்கும் நீங்கள் பார்க்கலாம். இப்படி மக்களில் சிலரை மட்டந்தட்டிக் கேவலப்படுத்துவது பெரும் பாவமாகும். இப்படிச் செய்யும் ஆணவக்காரர்கள் சாத்தானின் சந்ததிகள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

மக்களில் சிலர் உயர்ந்தவர்., சிலர் தாழ்ந்தவர் என்பதற்கு ஓர் அளவுகோல் உண்டு. அது என்ன?

இறைவன் மீது விசுவாசம்கொண்டு நற்குணத்துடன் வாழ்பவர்கள் -நற்பணி ஆற்றபவர்கள் உயர்ந்தவர்கள்.

இறைவனை மறுத்து ஆணவம் கொண்டு தீய குணத்துடன் வாழ்பவர்கள் - மக்களுக்குத் தீமை செய்பவர்கள் தாம் தாழ்ந்தவர்கள்.

இன்னொரு முக்கியமான படிப்பினை யாதெனில், மனிதன் பலவீனமானவன். அவன் தவறு செய்வது இயல்பு தான்! ஆனால் தவறுதான் எனத் தெரிந்த பிறகும் அதில் பிடிவாத மாக இருப்பதுதான் கூடாது!

ஆதமும் ஹவ்வாவும் தங்களது தவற்றை எண்ணி மனம் வருந்தி பாவமன்னிப்புக் கோரினார்கள். அல்லாஹ் அதனை ஏற்று அவர்களுக்கு மன்னிப்பு வழங்கினான்.

ஆனால் இப்லீஸ் அப்படிச் செய்யவில்லை. தவறை ஒப்புக் கொள்ளவில்லை. அதனால் இறைவனின் கோபத்துக்கு ஆளானான்.

பிள்ளைகளே! நம்மிடம் தவறுகள் நிகழ்ந்துவிடும்போது மனம் வருந்திட வேண்டும். திருந்திட வேண்டும். அப்பொழுதுதான் அல்லாஹ் நம்மை மன்னிப்பான். நம்மைத் துஸ்மையாக்குவான். மீண்டும் நம்மீது கருணை பொழிவான்.